# இயலிசை


தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 2 1-11-83 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை இதழ் 11/12


இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவு

## நாதசுர தவில் கலைஞர்கள் பேரணி தஞ்சையில் நடைபெற்றது

தஞ்சாவூர் மாவட்ட இசைக் கலைஞர்கள் சார்பில் இலங்கையில் தமிழர்களை கொடூரமான முறையில் கொலை செய்து, வீடுகளை கொள்ளையடித்த அரக்கன் ஜெயவர்தனே ஆட்சியையும், சிங்கள வெறியர்களின் போக்கையும் கண்டித்து மாபெரும் மவுன ஊர்வலம் 4-8-83 அன்று நடைப் பெற்றது. ஊர்வலம் தஞ்சாவூர் அண்ணா சிலையில் இருந்து புறப்பட அதன் முன்னதாக ஆள் உயர கருப்பு கொடியை வலங்கைமான் T. T. வேலு ஏந்தி செல்ல கூட்டத்தின் தலைவராக மதுரை M.P.N. சேதுராமன், பொன்னுசாமி முன் செல்ல அதை தொடர்ந்து திருக்கருகாவூர் T. G. சுப்பிரமணியம், வலங்கைமான் S. A. சௌந்திரராஜன் அரித்துவாரமங்கலம் A. K. பழனிவேலு, திருவாளப்புத்தூர் T.A. கலியமூர்த்தி, தஞ்சாவூர் T.R. கோவிந்தராசன், வேதாரண்யம் V. G. பாலசுப்பிரமண்யம், பருத்தியப்பர் கோவில் P.K சௌந்திரராசன் சகோதரர்கள், திருமெய்ச்சூர் T. K. சண்முகசுந்தரம், திருநாகேஸ்வரம் T.R. கோவிந்தராசன், T. R. சுப்ரமண்யம் திருகருகாவூர் T.G.D. சிவகுரு, T.G. தட்சிணாமூர்த்தி, கோட்டூர் K. N. ராசரத்தினம் சகோதரர்கள், ஆலூர் ரவி, நாங்கூர் T. K. கருப்பையா, செந்தில் நாதன், குளிக்கரை அவரையானந்தம் மற்றும் ஏராளமான இசைக்கலைஞர்கள் தங்கள் இசைகருவிகளுடன் ஊர்வலத்தில் எடுத்துகொண்டு தஞ்சையின் முக்கிய வீதிகளின் வழியாக அருள்மிகு பெரிய கோவிலை வந்து அடைந்து ஆயிரக்கணக்கான மக்கள் மத்தியில் எல்லா கலைஞர்களும் ஒரே நேரத்தில் இணைந்து நாதஸ்வரம், தவில் இசையை பொழிய வானமே அதிரும் அளவிற்கு நாத அஞ்சலி செலுத்தப்பட்டது. அன்று முதல் இலங்கையில் "மயான அமைதி" ஏற்பட்டு உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

## மியூசிக் அகடமியின் வருட இடை இசை விழா!

சென்னை மியூசிக் அகடமியின் இறுதி இசை விழா கடந்த 19-9-83 முதல் 23-10-83 வரை பல்வேறு தேதிகளில் நடைபெற்றது. இந்த இசை விழாவில் இசை, நாட்டியம் இசைச்சொற்பொழிவு ஹரிகதை ஆகிய நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. நாட்டிய நிகழ்ச்சிகளில் குமாரிகள் நித்ய கல்யாணி வைத்யநாதன், சுஜாதா சீனிவாசன் கௌசல்யா நரசிம்மன், K. சைலஜா, C. பாரதி (வயலின் சந்திர சேகரன் மகள்) அகடமியின் T.T.K. அரங்கத்தில் நடன நிகழ்ச்சிகளை நடத்தினர்.

அகடமியின் கஸ்தூரி சீனுவாசன் அரங்கத்தில் கோட்டு வாத்தியம் அல்லம் கோடீஸ்வரராவ் P. S. நாராயணசாமி, T.N கிருஷ்ணன் குழுவினர் வயலின், திருவாரூர் சேதுராமன் குளிக்கரை S. P. விசுவலிங்கம், B. கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அதே அரங்கத்தில் காலை நேரங்களில் T. S. பால கிருஷ்ண சாஸ்திரிகள், கமலா மூர்த்தி, S ஜானகி ராமன், V. S. வெங்கடரமணராவ், பாலமீர சந்திரா மன்னார் குடி சாம்பசிவபாகவதர் ஆகியோர் இசைச் சொற்பொழிவும் நடைபெற்றன.

இவ்வருட இசை விழாவும் மாநாடும் வழக்கப்படி டிசம்பர் 83 மாதத்தில் நடக்கும். இதற்கு தலைமை தாங்க கர்நூலைச் சேர்ந்த இசை ஆராய்ச்சியாளர் டாக்டர் S. பினகபாணி அவர்களை அகடமியார் தேர்ந்தெடுத்துள்ளனர்.



## உடுமலை தமிழிசைச் சங்க இசைப் பள்ளிக்கு நிதி வசூல்

## கிருபானந்தவாரியார் நிகழ்ச்சிகள் நடத்தினர்

*

மறைந்த திருநெல்வேலி சுந்தர ஓதுவா மூர்த்திகள் நினைவாக உடுமலைப் பேட்டையில் அவரது மகனார் தி. சு. செந்தில் ஆறுமுகம் தமிழிசைச் சங்கம்ஒன்றினை பல வருடங்களாக நடத்தி வருகின்றார். அவர் தற்பொழுது தமிழ்க்கலைகளை வளர்க்க குறிப்பாக தமிழிசையில் பயிற்றுவிக்க சிறந்த பள்ளி ஒன்றினையும் கல்லூரியினையும் அங்கு அமைக்க முயற்சி எடுத்து வருகின்றார். இப்பள்ளிக்கு தனது தந்தை பெயரினையே வைத்துள்ளார். "இதன் வளர்ச்சி நிதிக்காக திரு முருக கிருபானந்த வாரியார் அக்டோபர் 1 முதல் 6 வரை உடுமலைப் பேட்டையில் கந்த புராணம் தொடர் இசைச் சொற்பொழிவினை நடத்தினார். நிகழ்ச்சியினை முதல் நாள் தவத்திரு சுந்தர சுவாமிகள் தொடங்கி வைத்தார். நிறைவு நாளன்று பேரூர் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் கலந்து ஆசியுரை வழங்கினார். மற்றும்ஏராள அன்பர்கள், பொதுமக்கள் தினசரி திரளாக வந்து இருந்தனர்.

சுந்தர ஓதுவா மூர்த்திகள் தமிழிசைப் பள்ளி விரைவில் தொடங்கி தமிழிசைப்பணியாற்றிட இயலிசை வாழ்த்துகள்.

## நாமகிரிப்பேட்டையாருக்கு 'இசைப் பேரறிஞர்' விருது ! தமிழிசைச் சங்கம் வழங்குகின்றது

சென்னை தமிழ் இசை சங்கத்தின் 41-வது ஆண்டு விழா டிசம்பர் 21-ந் தேதி சென்னையில் ராஜா அண்ணாமலை மன்றத்தில் நடக்கிறது.

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் விழாவைத் தொடங்கி வைக்கிறார்.

தமிழ்நாடு அரசு நாதசுரக்கலைஞர் நாமகிரிப் பேட்டை கிருஷ்ணனுக்கு "இசைப்பேரறிஞர்" என்ற பட்டத்தை அமைச்சர் அரங்கநாயகம் வழங்குகிறார்.

## 'கச்சேரி'க்கு வந்த கலைஞர்கள் !

பிரபல இசைவாணர்கள் டாக்டர் M. பாலமுரளிகிருஷ்ணா, டாக்டர் செம்மங்குடி சீனுவாச அய்யர் இவர்களுக்குள் ஒரு புது ராகம் பற்றி கருத்து வேறுபாடு வந்தது, அது நீதிமன்ற கச்சேரி வரை சென்றது. பின்னர் இரு கலைஞர்களும் சமீபத்திலசென்னை வழக்கு மன்றத்திற்குவந்து தற்பொழுது சமரசமாகி விட்டோம் என்று வாக்குமூலம் வழங்க நீதி மன்ற நடுவரும் வழக்குகளைத் தள்ளுபடி செய்தார்.

கருத்து வேறுபாடு சென்னை மியூசிக் அகடமி கூடத்தில் ஏற்பட்டதால் அவர்களும் இச்சமரசத்திற்கு ஓர் ஒப்புதல் மனு தாக்கல் செய்திருந்தார்கள்.

தமிழகத்தில்

## நாதசுரமே முதல் இசைக்கருவி !

### தினத்தந்தி பாண்டியன் பேச்சு

வயலின் மேதை குன்னக்குடி வைத்தியநாதன் தயாரித்த "தோடி ராகம்" திரைப்பட வெளியீட்டினையொட்டி அவர் பத்திரிகையாளர் கூட்டத்தை சென்னை A.V.M. பேரு தனி திரையரங்கத்தில் கூட்டியிருந்தார். இசைக்கலைக்கு சிறப்பு கொடுத்து திரைப்படம் எடுத்துள்ள வைத்தியநாதன் அவர்களை பாராட்டி M. N. ராகவன் PRO, திரை இயக்குனர் மதி ஒளி சண்முகம், மற்றும் பலர் பேசினர். அப்பொழுது பேசிய "தினத்தந்தி" பாண்டியன் திரு வைத்தியநாதன் அவர்களை தான் மறைந்த இயக்குனர் A. P. நாகராஜன் வீட்டில் சந்தித்த பழைய நாட்களை நினைவு படுத்தினார். பின்னர் தமிழகத்தில் முதன்மையான இசைக்கருவி நாதசுரம். அந்த நாதசுரத்தை போல் வயலின் வாசிப்பவர் குன்னக்குடியார் என்று பாராட்டினார்,

## அலர்மேல் மங்கையின் அருமையான நடனம் !

கடந்த 15-9-83 அன்று சென்னை கிருஷ்ணகான சபையில் பாண்டிச்சேரி காளிதாசு காகித தொழிற்சாலை அதிபர் திரு A. L. காளிதாசு அவர்களின் மகள் செல்வி அலர்மேல் மங்கையின் நடன அரங்கேற்றம் டாக்டர் K. சௌரிராசன் MLA தலைமையில் நடைபெற்றது. நடனமங்கைக்கு இருந்த நல்ல எடுப்பான உயரமான உடலும், சிரித்த முகமும் அவரது நடன கலைக்கு மேலும் சிறப்புசெய்தது. அவரையும், ஆசிரியை இந்திரா ராஜனையும் பாராட்டி ஜெப்பியார் MLC, நகர போலீசு ஆணையாளர் ஸ்ரீபால் நடனமணி சுதா ராணி ரகுபதி மற்றும் பலர் பாராட்டி உரையாற்றினர் ஏராள ரசிகர்கள். பிரமுகர்கள் வந்திருந்தனர். நடனத்தை திரைப்படமாக VIDEO எடுத்தனர். PRO திரைநானி அனைவரையும் வரவேற்றார்.

## குன்னக்குடியின் (தோடி) ராகம்

### மதுரை சேஷ கோபாலன் நடித்துள்ளார்

இளம் இசைக்கலைஞர் மதுரை T.N. சேஷகோபாலன் பாடவும் நடிக்கவும் வைத்து இசைக்கலைஞன் ஒருவனது வாழ்க்கையை படமாக எடுத்துள்ளார். பிரபல வயலின் இசைக்கலைஞர் குன்னக்குடி வைத்தியநாதன் அதில் இசையமைப்பாளராகவும் பணியாற்றுவதுடன் ,வயலின் குட்டிக் கச்சேரி ஒன்றினை வளையப்பட்டி தவிலுடன் செய்து நடித்தும் உள்ளார். அவரது மருமகன் ராம்கி என்ற ராமகிருஷ்ணன் படத்தை இயக்கியுள்ளார்,

தோடிராகம் பாடுவதில் பெயர் பெற்ற பாடகர் தனது தங்கைத் திருமணத்திற்கு அந்த ராகத்தை ஓர் சூழ்ச்சியில் சிக்கி அடகு வைத்துவிட்டு, தோடி ராகம் பாட முடியாது பெயரினை இழக்கின்றார். அவரது காதலியான நளினி ஓர் நடன நங்கையாக வந்து தனது உயிரை இழந்து தோடியை மீட்டுக் கொடுத்து பாடகருக்கு புது வாழ்வு அளிக்கின்றார். இதுவே கதை. இசையுலகில் யாரோ ஒரு பாடகன் தோடியை அடகு வைத்தான் என்றுள்ள செய்தியை மையமாக வைத்து கதை புனைந்துள்ளார்கள் எனினும் சத்தான கதை இல்லை.

மதுரை சேஷ கோபாலன் இன்று திரையுலகில் இருக்கும் பல நடிகர்களை விட அழகான வாலிபராக உள்ளார். தரமாக நடித்தும் பாடியும் உள்ளார். எனினும் அவரது சரீரத்தில் உள்ள கவர்ச்சி சாரீரத்தில் இல்லை. குறிப்பாக திரைப்படத்திற்கு வேண்டியளவு MELODY இல்லையே.

பாமர மக்களையும் நம்பி தானே படம் ஓட வேண்டும்? எப்படி இருப்பினும் இசைக் கலைக்கு ஏற்றம் கொடுத்து படம் எடுத்துள்ள குன்னக்குடியாருக்கு இயலிசை வாழ்த்துக்கள்.

திரைப்பட விமர்சனம்

## நடிப்பு சக்கரவர்த்தி வாசித்த மிருதங்கம் !

சுப்பையாபிள்ளை என்றுபெரும் மிருதங்க கலைஞர் கன்னியாகுமரி மாவட்டத்தில் சுசீந்திரத்தில் வாழ்ந்தார் என்றும் அவர் மிருதங்கம் வாசித்தே குலையாக கட்டி வைத்திருந்த வாழைப் பழங்களைப் பழுக்க வைத்தார் என்றும் கலையுலக வரலாறுஒன்று உண்டு. அந்த சுப்பையா பிள்ளையை முதல் பாத்திரமாக வைத்து அந்த மிருதங்க கலைஞர் வாழ்வில் நடந்ததாக சிலகற்பனை சம்பவங்களைச் சேர்த்து எடுக்கப் பட்ட வண்ணப்படம் மிருதங்க சக்ரவர்த்தி. கலைஞானம் கதையை அமைத்து, இயக்குநர் K. சங்கர் படமாக்கி உள்ளார்.



நடிகர் திலகம் சிவாஜிகணேசன் மிருதங்ககாரராக வந்து பாத்திரத்திற்கும் படத்திற்கும் உயிர் கொடுக்கின்றார்.

துணைவி K. R. விஜயா ஒரு பாடகியாகவும் மகன் பிரபு இளைய மிருதங்க கலைஞனாகவும் வந்து கச்சிதமாக நடிக்கின்றனர். பொறுமை கொண்ட பாட்டுக் கலைஞர் நீல கண்ட சாஸ்திரியாக வில்லன் நம்பியார் பொருத்தமாக வருகிறார். V. K. R. மனோரமா, மகேந்திரன் தேங்காய் சீனிவாசன் இவர்களின் "கிச்சு கிச்சு" காமெடியும் இருக்கின்றது

பெரும் பாலும் அடிப்படை இசையில் அமைத்து பாடல்களை பளிச்சென தந்துள்ளார் இசையமைப்பாளர் M. S. விஸ்வநாதன் உமையாள் புரம் K. சிவராமன், மதுரை சீனுவாசன் C. R. கோபால கிருஷ்ணன் ஆகியோர் மிருதங்கம் வாசித்துள்ளனர்.

சுகமான ராகங்களே என்ற வாணி ஜெயராம் பாடலுக்கு கல்யாணி, ரஞ்சனி, கௌரிமனோகரியாக மூன்று நடன மணிகள் வந்து ஆடுவது எடுப்பாக உள்ளது.

நிற்க. வலுவில்லாத கதையாக இருந்தாலும் மேற் கூறிய இதர அம்சங்கள் படத்தினை சிறப்பித்து தயாரிப்பாளருக்கு வெற்றியைத் தந்துள்ளது. மிருதங்க கலைஞர்களுக்கும், கலைக்கும் ஞானத்திற்கும் ஏற்றமே தந்துள்ளது.

**பின் குறிப்பு :** இப்படத்தில் ஒற்றுமையான இசைக்கலைஞர்கள் சங்கம் ஒன்று காட்டப்பட்டுள்ளது அது போன்ற சங்கம் எங்கே உள்ளது என்று தேடிக் கொண்டிருக்கிறோம். விலாசம் இருந்தால் இயலிசைக்கு தெரிவிக்கவும்.

## கல்கத்தா பைன் ஆர்ட்சின் இசை விழா !

### சென்னையில் நடந்தது

மேற்கு வங்காள தலைநகரான கல்கத்தாவில் இயங்கி வரும் கல்கத்தா ஃபைன் ஆர்ட்ஸ் சபை கடந்த வருடம் முதல் சென்னையிலும் சிறிய இசை விழாக்களை நடத்தி வருகின்றது, இவ்வருட இசை விழா இம் மாதம் ஐந்து நாட்களில் மயிலை சாஸ்த்திரி கூடத்தில் நடைபெற்றது. இசைக் கலைஞர்கள் T. R. சுப்ரமண்யம் லோகநாத சர்மா, S. கல்யாண ராமன், திருவனந்தபுரம் R. S. மணி, K. V. கிருஷ்ணன் ஆகியோர் இசைவிருந்து அளித்தனர், பிரபல துணைக் கருவியாளர்கள் உடன் வாசித்தனர். ஏராள ரசிகர்கள் அழைக்கப்பட்டு வந்து கச்சேரிகளை ரசித்தனர்.

## திரைப்பட தயாரிப்பாளர்களுக்கு அறிவிப்பு !

கலைஞர்களை மையமாகவைத்து திரைப்படம் தயாரிக்க விரும்பும் தயாரிப்பாளர்களுக்கு திரைப் படத்திற்கு ஏற்ற தரமான நிறைய கதைகள் உள்ளன. பல உண்மை சம்பவங்களும் உள்ளன. கலைத்துறை சூழ்நிலை, நுணுக்கங்களுடன் பாத்திரங்களுடன் (Characters) எழுதித்தரப்படும்.

தொடர்பு கொள்ள
ஆசிரியர், 'இயலிசை'
கோடம்பாக்கம், சென்னை - 24

## கலைகளை வளர்க்கும் நவராத்திரி விழா நாடெங்கும் நடைபெற்றது



இவ்வருட நவராத்திரி கலை விழாக்கள் தமிழகமெங்கும் 7-10-83 முதல் 16-10-83 வரை பல கலை நிகழ்ச்சிகளுடன் திருக்கோயில்களிலும் சபைகளிலும் நடைபெற்றன. தலைநகர் சென்னையில் மயிலை அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயில், அருள்மிகு ஏகாம்பர நாத திருக்கோயில் பவளக்காரத் தெரு நகரத்தார் சங்கம், மாங்காடு அருள்மிகு காமாட்சியம்மன் திருக்கோயில் மற்றும் பல இடங்களிலும் பிரபல இசைவாணர்கள் கலைநிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

மயிலையில் கும்பகோணம் P. கிருஷ்ணசாமி பாபநாசம் திருமதி ருக்மணி, ரமணி, ஆலந்தூர் S. வரதேவன், வயலின் V. கோவிந்தசாமி நாயக்கர் & மாஸ்டர் சுரேஷ், திருமதி சரோஜா சீனிவாசன், சீர்காழி S. ஜெயராமன், சிவராம கிருஷ்ணன், C. முத்து ராஜா, ராஜலட்சுமி ஆகியோர் இசை நிகழ்ச்சிகளை நடத்தினர்.

காஞ்சிபுரம் அருள்மிகு ஏகாம்பரநாதர் திருக்கோயிலில் திருமதி ஹேமமாலினி, திருத்தணி N. சுவாமிநாதன், காஞ்சிபுரம் K. நாகசயனன், சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம், அமிதா கீர்த்தனா சகோதரிகள், தருமபுரம் சுவாமிநாதன், P. A. S. ராஜசேகரன் ஆகியோர் நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயிலில் வழக்கப்படி நவராத்திரி கலை விழா பெரும் இசை விழாவாக நடைபெற்றது. நாதசுரக் கலைஞர்கள் மதுரை M.P.N. சேதுராமன் MPN பொன்னுசாமி, மதுரை N. அழகு சுந்தரம் ஆகியோர் நிகழ்ச்சிகளும் திருமுருக கிருபானந்த வாரியார் இசைச் சொற்பொழிவும் சூலமங்கலம் சகோதிரிகள் M. R. விஜயா குன்னக்குடி வயலின் வலையப்பட்டி தவில், சீர்காழி கோவிந்தராஜன் முதலியோர் இசைநிகழ்ச்சிகளும், வீரமணி ராதா L. R. ஈஸ்வரி, கங்கை அமரன் மலேசியா வாசுதேவன் குழுவினர்கள் மெல்லிசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. முன்னேர கச்சேரிகளில் திருக்கருகாவூர் சகோதரிகள் வீணைசோழவந்தான் சகோதரிகள் விருதுநகர் M. K. நடராச பாகவதர் வீணை மீனும்பாள் ராமசாமி ஆகியோர் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஆலயதக்கார் V. N. சிதம்பரம் கலைஞர்களை வரவேற்று நிகழ்ச்சிகளை சிறப்பாக நடத்தினார்.

மதுரை அருள்மிகு கூடழலகர் திருக்கோயில் மதுரை சகோதரிகள் R. ஜெயமீனாட்சி நீலாயதாட்சி T. M. S. ரவீந்திரன் மதுரை சமரசம், T. N. சடகோபன், மதுரை V. சுவாமிநாதன் மதுரை G. R. மகாதேவன் B. R. ராஜகோபால் சரோஜா சீனுவாசன், K. V. ராமையா பிள்ளை நாதசுரம் ஆகியோர் இசை நிகழ்ச்சிகள் நடத்தினர். வாரியார் சுவாமிகள் சொற்பொழிவு ஆற்றினார்.

ராமேஸ்வரம் சங்கரன் கோவில் திருச்சி திருவானைக்காவல் திருச்செந்தூர் திருக்கோயில்களில்களிலும் கலைவிழாக்கள் நடைபெற்றன இது போன்ற கலை விழாக்களினால் தான் நமது கலைகளும் கலைஞர்களும் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். இன்னும் இது போன்ற விழா கலை நிகழ்ச்சிகளை தலந்தோறும் சிறப்புற நடத்தினால் கலை மொழி, பண்பாடு வளர்ந்து நாடும் இறையருள் பெற்று செழிக்கும்.

கலை அன்பர்களே! வணக்கம்!

இவ்வருடமும் வரும் இசைவிழா பருவத்தில் இயலிசை சிறப்பிதழ் (15—12—83) வெளியிட உள்ளோம். இதில் சென்னையில் நடைபெறும் இசை விழா கலை நிகழ்ச்சிகள் விபரம் விருது பெறும் கலைஞர்களின் வாழ்க்கை குறிப்புகள் மற்றும் கலை உலக செய்திகள் வெளிவரும். இந்த இதழ் இசை விழா நடைபெறும் அனைத்து இடங்களிலும் கிடைக்கும்,

விலை ரூபாய் ஒன்று

ஆசிரியர்

'இயலிசை'





தஞ்சை மாவட்டம் திருவிழிமிழலை நாதசுரக்கலைஞர் திரு நாராயணசாமி பிள்ளையின் மகன் N. ரமேஷ் 10 வயதான இவன் அந்த மாவட்டத்தில் நிறைய நாதசுரக்கச்சேரிகள் செய்து புகழ்பெற்று வருகின்றான் இவனுக்கு இயலிசை வாழ்த்துகள்!



## மதுரையில் இசை விழா

## ஸ்ரீ சத்குரு சங்கீத சமாஜம் ஏற்பாடு

ஸ்ரீ சத்குரு சங்கீத சமாஜம் மதுரை மாநகரில் உள்ள பழம் பெரும் இசைச் சபையாகும் இச் சமாஜம் இவ்வருடம் 1984 ஜனவரி 13-ம் தேதிமுதல் 25 வரை தல்லாகுளத்தில் உள்ள லட்சுமி சுந்தரம் கூடத்தில் இசைவிழா நடத்த உள்ளனர். பல இசை வாணர்கள் விழாவில் பங்கு பெறுகின்றனர். இவ்விழாவில் வீணைமேதை S. பாலச்சந்தருக்கு "மதுர கலா பிரவீண" என்ற பட்டத்தை அளிக்க உள்ளனர். இச் சபையின் வருடாந்திர கௌரவ விருதினை வயலின் கலைஞர் மதுரை T. K. சுப்பராமபாகவதர் அவர்களுக்கு வழங்கி பண முடிப்பும் அளிக்க உள்ளனர்.

ந. இராமநாதன்,
18, ... பிரதான சாலை
R A புரம்,
சென்னை 28




TN/MS(S) 260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani, Madras 600 026, Published & Edited by M. Lakshmi, 57, South Sivan Koil Street. KODAMBAKKAM, MADRAS - 600 024.

கலைத் தொடர் கதை

# ஆடலரசி அபிராமி

## 9. குத்தாலம் பாப்பா !

எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தில் பொதுவாக கலைஞர்களின் புகழும் நிலையும் உயர்ந்து நின்றதால் அவர்களை கலை நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்வதும் அழைத்து வருவதும் திருப்பி அனுப்புவதும் ஏக அமர்க்களமாக இருக்கும். அவர்களை கலை நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்யவே ஒரு குழுவினர் செல்வார்கள். அக்கால கலைஞர்கள் எளிதில் நிகழ்ச்சிகள் ஒத்துக் கொள்ள மாட்டார்கள் நன்றாக தெரிந்தவர்கள் யாரேனும் ஒருவர் நடுவில் இருந்தால் தான் ஒப்புக் கொள்வார்கள். எனவே குழுவில் கலைஞருக்கு தெரிந்த ஒருவரும் பெரும்பாலும் அவரும் ஒரு கலைஞராக இருப்பவர் உடன் செல்வார். நிகழ்ச்சி ஏற்பாடுகள் முடிந்து நல்லபடி நடந்து விட்டால் அந்த கலைஞருக்கும் சன்மானம் உண்டு. தஞ்சாவூர் பஞ்சாட்சர பாகவதருக்கு இது போன்ற வருமானம் தான் அதிகம்.

தற்பொழுதெல்லாம் கலைஞர்கள் வெளியூரில் நிகழ்ச்சி ஒப்புக் கொண்டால் நிகழ்ச்சியன்றோ அல்லது நிகழ்ச்சி நேரத்திற்கு சற்று முன்னரோ தான் வருவார்கள். நிகழ்ச்சி முடிந்த உடன் முடிந்தவரை அன்று இரவோ கிளம்பி விடுகின்றனர். அக்காலத்தில் கலைஞர்கள் குழு, நிகழ்ச்சி நாளுக்கு ஓரிரு நாட்கள் முன்னரே வந்து நிகழ்ச்சிக்குப் பின் ஓரிரு நாட்கள் தங்கியும் செல்வது உண்டு. அதனை கச்சேரி வைத்தவர்களும் அந்த ஊர் பொது மக்களும் பெருமையாக பேசிக் கொள்வார்கள், அநேகமாக ஊர் பெரிய மனிதர்கள் அனைவரது வீட்டு விருந்தினையும் உண்டுதான் கலைஞர்கள் திரும்புவர்.

கும்பகோணம் மாமக விழாவிற்கு சதுர் கச்சேரி செய்யவந்த குத்தாலம் பாப்பா குழுவினர் மறுநாளும் இருந்துவிட்டு மூன்றாவது நாள் காலை கும்பகோணம் ரயிலடிக்கு வந்தனர். அன்று இரவு மாயூரம் அருகே வேறு நிகழ்ச்சி இருந்ததால் குத்தாலம் செல்லாமல் நேரே மாயூரத்திற்கு பயண சீட்டுகள் வாங்கிக் கொண்டு ரயிலடியில் குழுமி இருந்தனர். அவர்களை வழியனுப்புவதற்கு ஒரு சிறு குழுவும் வந்திருந்தது. அதில் கச்சேரி ஏற்பாடு செய்தவர்கள், பாப்பாவுக்கு வேண்டிய பெரிய மனிதர்கள் இருவரும் அவர்களின் எடுபிடியும் இருந்தனர். பாப்பாவிற்கு வயது சுமார் 35 ஆகியிருந்தாலும் அவளது உடல் வாகு 20 வயதே மதிக்கும்படி இருக்கும். சற்றுக் குள்ளமாகவும் நல்ல நிறமாகவும் இருப்பாள். கட்டுக் குலையாத மேனி சுருங்கச் சொன்னால் அபிராமியைப் பார்த்தால் சாமுகனுக்கும் கலையம்சம்தான் தெரியும்; பாப்பாவை பார்த்தால் வயதானவனுக்கும் வாலிபமிடுக்கு வரும் தொழிலில் இருபது வருட அனுபவம் உண்டு. எவரையும் தனது பேச்சினால் கவர்ந்து நன்கு பழகுவாள் ரயிலடியில் அவளை பார்க்க ஒரு கூட்டம் சுற்றி நின்று கொண்டிருந்தது.

பாப்பாவும் பெரிய மனிதர் ஒருவரும் தனியே ஒரு இடத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அவர்களுக்குள் ஏதேனும் அந்தரங்கம் இருக்கலாம் இருந்தாலும் அவர்கள் பேசியது பெரும் பாலும் முதல் நாள் இரவு நடந்த அபிராமி கச்சேரியை பற்றிதான் இருந்தது. அபிராமியின் திடீர் புகழ் பாப்பாவிற்கு அதிர்ச்சியைக் கொடுத்திருந்தாலும், மனதிற்குள் அவளை பாப்பா வெறுக்கவில்லை. பந்தநல்லூர் பங்கஜத்திற்கு அன்று போட்டியாக வந்து அவளை ஊரோடு அனுப்பி வைத்தவள் குத்தாலம் பாப்பாதான். பங்கஜமும் அன்று பாப்பா வருகைக்கு பின் ஏனோ நடனமாடுவதை நிறுத்திவிட்டாள். கலை உலகில் ஒருவரது வளர்ச்சி ஒருவருக்கு ஓய்வு கொடுக்கும் என்பதனை பாப்பா நன்கு அறிந்தவள். தவிர பாப்பாவிற்கு தனது அழகுக்கும், கலைக்கும் அவ்வளவு சீக்கிரம் ஓய்வு கிடைத்து விடாது என்ற நம்பிக்கை இருந்தது. அபிராமியைப்பற்றி அவள் வேறு கணக்குகள் போட்டிருந்தாள். எப்படியேனும் அவளை சரிகட்டி தனது ஒரே ஏகபுதல்வன் மகாராஜாவிற்கு கட்டி வைத்து விட வேண்டும் என்பது அவள் அந்தரங்க ஆசை. அவனுக்கும் அந்த ஆசையைக் காட்டிதான் அவள் அவனை ஓரளவுக்கு கட்டுபடுத்தி வைத்திருந்தாள்

இந்த விபரங்கள் பாவம் மற்ற இசைக் குழுவினருக்கு தெரியாது அவர்கள் பாப்பாவிற்கு பரிந்து பேசுவது போன்று ஏதோதோ பேசிக் கொண்டிருந்தார்கள். போதாக்குறைக்கு அபிராமியின் புது ரசிகன் குளத்துமணி வேறு அங்கு வந்து சேர்ந்தான். அவன் வாய் எப்பொழுதும் சும்மா இருக்காது கோயிலில் பிள்ளையாருக்கு மந்திரம் சொல்லி கொண்டு மணியாட்டி கொண்டிருப்பான். வெளியில் யாருக்காவது 'மந்திரம்'' சொல்லி அவர்கள் மனதை ஆட்டிக் கொண்டிருப்பான், இது அவனது சுபாவம்.

குளத்து மணிக்கு குத்தாலம் பாப்பா நடனக்குழுவினர் அனைவரையும் நன்கு தெரியும். குத்தாலம் கணபதி பிள்ளையிடம் ஆரம்பத்தில் பயின்ற பாப்பா பின்னர் பலரிடம் சதுர் பயின்று தற்பொழுது விசேஷம் இல்லாத ஒரு நட்டுவனாரையே தனக்கு தாளம் தட்ட வைத்திருந்தாள். எனவே அவர் பாப்பாவுக்கு அடக்கமே; வாயே திறக்க மாட்டார்; மற்ற பாக நட்டுவனார், முட்டு நட்டுவனார் அனைவரும் நன்கு பேசுவார்கள்.

''நேற்று அபிராமி சதுருக்கும் போயிருந்தேன், வயசு சிறுசா இருந்தாலும் ஆட்டம் பெரிசா இருந்தது. சாமி பின்னாலே ஜனங்க இல்லே. சதுர் கச்சேரி நடந்த இடத்திலே தான் இருந்தாங்க'' என்றான் குளத்துமணி.

இதற்கு பதில் சொல்ல குழுவினரில் உள்ள பலர் விரும்பினாலும் உடனே பதில் சொல்ல இயலாத நிலையில் அனைவரும் இருந்தனர். வெற்றிலை சீவல் போட்டுக் கொண்டு வாய் திறக்கமுடியாத நிலையில் அவர்கள் இருந்தனர். இருந்தாலும் முட்டு நட்டுவனார் மாத்திரம் ஓரமாகசென்று தாம் பூலத்தை தியாகம் செய்துவிட்டு குளத்துக்கு பதில் சொல்ல ஆரம்பித்தார்.

''குருக்களே! புதுசா இருக்கும் போது எதுக்குமே மவுசு இருக்குமய்யா. அடுத்த வருஷம் இந்த மவுசு இருக்குதா பாரு. பழசு ஆகியும் மவுசு குறையாம இருப்பதுதான் கௌரவம். அதற்கு தொழில் வேணுமய்யா, சும்மா கையை கால ஆட்டி பல்இளிச்சா போதுமா'' என்று பொரிந்து தள்ளினார்.

இப்படி ஒரு பதிலை குளத்து எதிர்பார்த்துதான் நமட்டு சிரிப்பு சிரித்துக்கொண்டு, 'நட்டுவனாரய்யா, வெற்றிலை சீவல் அதிகமாக போட்டுட்டீங்க போல இருக்கு, ரயில்வே ஸ்டேசனையே கரையாக்கிட்டீங்க'' என்று அவர் எச்சிலாக துப்பியதனையும், வார்த்தைகளாக துப்பியதனையும் குறித்து இரு பொருள்பட கூறினான்.

இதற்குள் பாக நாட்டுனார் தாம்பூல எச்சிலை துப்பிவிட்டு குளத்து மீது பாய தயாரானார்.

புது கோட்டை இளையராசா பின்னாலே எப்பொழுதுமே ஒரு கூட்டம் இருக்கு! அதுதான் அவ சதுர்லே சேர்ந்திருக்கும். அவ ஆத்தாவே பாப்பா வந்த பிறகு சதுரை மூட்டை கட்டிக் கொண்டாள். இவ ஆட்டம் எத்தனை நாளைக்கு? என்றார் அவர்.

இவ்வளவு எதிர்ப்பு வந்தவுடன் குளத்து பின் வாங்கினான். ''ஆமாம் உண்மைதான் பாப்பா தொழில் எங்கே சின்னப் பொண்ணு இவ தொழில் எங்கே நட்டுனார் சொல்வது மாதிரி புதுக்குட்டின்னு கூட்டம் கூடுது, தேவதை மாதிரி அழகா வேறு இருக்கா இல்லே'' என்று தனது பேச்சில் பொடியையும் வைத்தான்.

அதற்குள் குழுவினரில் தித்தி (கிளாரினட்) ஊதும் பெரியவர் ஒருவர் குறுக்கிட்டு, 'குட்டியிலே கழுதை கூடத்தான் அழகாஇருக்கும். குதிரையாகி விடுமா? நம்ம பாப்பாஅழகு வருமா?' என்றார். அவருக்கு பாப்பா சதுருக்கு வாசிப்பது என்றால் பெரும் மகிழ்வு வேறு குழுவுக்கும் போக மாட்டார். பாப்பாவை பார்த்துக் கொண்டிருந்தாலே அவருக்கு போதும்.

இந்த நேரத்தில் ரயிலடியில் ஒரு சலசலப்பு ஏற்பட்டது. ரயிலடிக்கு வெளியே திடீரென்று கூட்டம் கூடியது. குதிரைகள் பூட்டிய சாரட் வண்டியில் அபிராமியும், இளையராசாவும் வந்து இறங்கினர். அடுத்துவந்த வண்டிகளில் அவளது குழுவினர் கணபதி பிள்ளை உட்பட வந்து இறங்கினர். அந்த காட்சியைப் பார்த்து பாப்பா குழுவினருக்கு முகமே மாறிவிட்டது. குளத்து அவர்களைப் பார்த்து ஒருவிஷமப் புன்னகை புரிந்தாள்.

(தொடரும்)

---

## திருமறைக் காவலர் நினைவு விழா !



மறைந்த திருமறைக் காவலர் அ. சோமசுந்தரம் செட்டியார் நினைவு நாள் விழாவினை சென்னை மயிலை சைவ சித்தாந்தப் பெருமன்றம் தங்கள் சங்கத்தில் 29—10—83 அன்று மாலை நடத்தினர். மன்ற தலைவர் பெ. திருஞானசம்பந்தம் M.A.L.T. தலைமை வகிக்க ஓதுவார்கள் திருத்தணி N. சுவாமிநாதன், T. S. தண்டபாணி தேசிகர் குழுவினர் திருமுறை இசையரங்கு நடைபெற்றது. M. இராமலிங்கம் நன்றியுரையாற்றினர்.

